




# சேர்வராயன் மலையின்

## வரலாறு கூறும் புகைப்படங்கள்












ஏற்காடு இளங்கோ

# சேர்வராயன் மலையின் வரலாறு கூறும் புகைப்படங்கள்

# சேர்வராயன் மலையின் வரலாறு கூறும் புகைப்படங்கள்

சேர்வராயன் மலையின் வரலாறு கூறும் புகைப்படங்கள்

ஏற்காடு இளங்கோ

yercaudelango@gmail.com

மின்னூல் வெளியீடு : FreeTamilEbooks.com



அட்டைப்படம் - லெனின் குருசாமி - guruleninn@gmail.com

# என்னுரை

சேர்வராயன் மலையில் மனித இனத்தின் வாழ்க்கை என்பது புதிய கற்காலத்தில் இருந்து தொடங்குகிறது. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் இருந்தே மனிதர்கள் இங்கு வாழ்ந்ததற்கான ஆதாரங்கள் நிறைய கிடைத்துள்ளன. இப்புத்தகத்தில் படங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளன. பெரிய படங்களும், அதற்கு கொடுக்கப்பட்டுள்ள விளக்கங்களும் இம்மலையின் வரலாற்றை எடுத்துக் கூறும்படி உள்ளது. இது ஒரு எளிய முயற்சி மட்டுமே. ஆனால் மிகவும் பயனுள்ளது என்பதில் எந்த மாற்றுக் கருத்தும் இருக்க முடியாது.

இந்தப் புத்தகத்தைத் தயாரிப்பதில் எனக்கு உதவிகள் புரிந்த திருமிகு.ராஜ்கார்த்திக், திருமிகு.கிருஷ்ணமூர்த்தி ஆசிரியர், ஓவியர் மனோ, ராமகிருஷ்ணன் ஆகியோருக்கு நன்றி. இப்புத்தகத்தை தட்டச்சு செய்து கொடுத்த திருமிகு.நவீன் குமார் அவர்களுக்கும் செழுமைப்படுத்திக் கொடுத்த ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியர் திருமிகு. ஜோதிமதன் அவர்களுக்கும் இதை வெளியிட்ட Noolus publishing மிற்கும் நன்றி.

வாழ்த்துகளுடன்

ஏற்காடு இளங்கோ

# 1.சேர்வராயன் மலை



…

சேர்வராயன் மலை 27 கிலோ மிட்டர் நீளமும், 19 கிலோ மீட்டர் அகலமும் கொண்டுள்ளது. இதன் பரப்பளவு சுமார் 400 சதுர கிலோ மீட்டர் ஆகும். இம்மலை சுமார் 25 கோடி ஆண்டுகளுக்கு முன்பு தோன்றத் தொடங்கி 9 கோடி ஆண்டுகளுக்கு முன்பு வரை வளர்ச்சி அடைந்தது.

# 2.பாக்சைட்



…

சேர்வராயன் மலையின் 6 முகடுகளில் சுமார் 65 லட்சம் டன்கள் அளவிற்கு பாக்சைட் (Bauxite) இருக்கும் என 1942 ஆம் ஆண்டு இந்திய புவியியல் துறை பதிவேடு 5 என்னும் புத்தகத்தில் வெளியிடப்பட்டது. 1942 முதல் 2010 ஆம் ஆண்டு வரை வெட்டி எடுத்தபின் காணப்படும் அலங்கோலக் காட்சி.

# 3.அலிராக்ஸ்



…

அலிராக்ஸ் (Alirox) கம்பெனி 1944 ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. 1997 இல் மூடப்பட்டது. இந்த கம்பெனி செயல்பட்ட இடம் சேலம் மாவட்ட உதவி ஆட்சித் தலைவராக இருந்த பிரீட் என்பவரால் 1845 ஆம் ஆண்டில் கட்டப்பட்ட பேர்லான் ஓட்டலாகும். தற்போது இது இடிக்கப்பட்டு பிளாட் போட்டு விட்டனர்.

# 4.சமுத்திரக்காடு



…

காக்கம்பாடி கிராமத்தை அடுத்து உள்ள உயரமான மலை குன்றுப் பகுதியை சமுத்திரக்காடு என அழைக்கப்படுகிறது. இங்கிருந்து தொலை நோக்கி மூலம் ஆங்கிலேயர்கள் பார்த்தபோது வங்காள விரிகுடா தெரிந்த காரணத்தால் சமுத்திரக்காடு எனப் பெயர் வந்தது எனக் கூறுகின்றனர். இங்கிருந்து சூரிய உதயத்தைக் காணலாம்.

# 5.காட்டு மாமரம்



…

ஏற்காடு தாலுக்காவில் சின்ன மதூர் என்கிற கிராமம் உள்ளது. இங்கு 200 ஆண்டுகள் வயதுடைய மிகப் பெரிய மாமரம் உள்ளது. இது 100 அடி உயரமும், 44 அடி சுற்றளவும் கொண்டது ஆகும். இது சேர்வராயன் மலையில் உள்ள மிகவும் வயதான மாமரம் என்பது குறிப்பிடத்தக்கது.

# 6.சோழ வேங்கை



...

அசம்பூர் கிராமத்தில் 300 ஆண்டுகளுக்கு மேல் வயதுடைய சோழ வேங்கை மரம் உள்ளது. இது 57 அடி சுற்றளவு கொண்டது. இம்மரத்தை 10 பேர் சேர்ந்து கட்டிப் பிடிக்கும் அளவிற்கு பெரியது. இது உலகிலேயே அதிக சுற்றளவு மற்றும் விட்டம் கொண்ட சோழ வேங்கை மரமாக இருக்கலாம்.

# 7.மலைசுத்தி



…

மோனோசிஸ் சேர்வராயன்சிஸ் (Monosis shevaroyensis) என்கிற மரம் சேர்வராயன் மலையில் மட்டுமே வாழ்கிறது. தற்போது வனப்பகுதியில் இது முற்றிலும் அழிந்துவிட்டது. இந்திய தாவரவியல் மதிப்பாய்வுத் துறையில் (BSI) 4 மரங்கள் பாதுகாப்பாக பராமரிக்கப்பட்டு வருகின்றன.

# 8.நாவல் மரம்



…

செம்மநத்தம் கிராமம் கடுமரத்தூர் என்னும் ஊரின் சாலை ஓரம் 200 ஆண்டுகள் வயதுடைய மிகவும் பழமையான நாவல் மரம் உள்ளது. இது சுமார் 100 அடி உயரமும், 28 அடி சுற்றளவும் கொண்டது. இது சேர்வராயன் மலையின் புராதானச் சின்னங்களில் ஒன்றாகும்.

# 9.ஏற்காடு பல்லி



…

சேர்வராயன் மலையில் மட்டுமே வாழக்கூடிய ஒரு பல்லியை 2000 ஆம் ஆண்டில், ஏற்காடு டவுன் பகுதியில் தாஸ் மற்றும் பாயர் ஆகிய இருவரும் கண்டுபிடித்தனர். இதன் அறிவியல் பெயர் நீமாஸ்பிஸ் ஏற்காடியன்சிஸ் (Cnemaspis yercaudensis) என்பதாகும். இது பகல் நேரப் பல்லியாகும்.

# 10.பச்சை ஓணான்



…

பச்சை நிறத்தில் ஒரு வகை ஓணான் உள்ளது. இது பச்சை ஓணான் (Green Lizard) என்று அழைக்கப்படுகிறது. இது மிகவும் அழகானது. இது அடர்ந்த பச்சை நிறத்தைக் கொண்டது. இதன் உடலை விட வால் 2 மடங்கு நீளமானது. இதன் நடு முதுகில் பெரிய செதில்கள் உள்ளன.

# 11.ஷார்டிஸ் பாம்பு



…

ஷார்டிஸ் கேடய வால் பாம்பு என்பது ஒரு அரிய வகை பாம்பு ஆகும். இது சேர்வராயன் மலையில் மட்டுமே வாழ்கிறது. இது 20 முதல் 40 செ.மீ நீளம் வரை வளர்கிறது. ஈரம் நிறைந்த மண்ணின் உள்ளே மறைந்து வாழ்கிறது. இது யாருக்கும் தீங்கு செய்யாது.

# 12.சிறுத்தைப் புலி



…

சேர்வராயன் மலையில் சிறுத்தைப் புலிகள் அதிகம் வாழ்ந்தன. 1930 ஆம் ஆண்டு ஏற்காடு ஏரியின் அருகில் ஒரு சிறுத்தைப் புலியைச் சுட்டுக் கொன்றனர். இது தான் சேர்வராயன் மலையில் வாழ்ந்த கடைசி புலி ஆகும். இதை ஊர்வலமாக எடுத்துச் சென்றனர்.

# 13.புதிய கற்காலக் கருவிகள்



…

சேர்வராயன் மலையில் மானிட வாழ்க்கை என்பது புதிய கற்காலத்தில் இருந்து தொடங்குகிறது. இதற்கு ஆதாரமாக 50 க்கும் மேற்பட்ட கிராமங்களில் புதிய கற்காலக் கருவிகள் உள்ளன. இவை சுமார் 3000 முதல் 6000 ஆண்டுகள் பழமை வாய்ந்தவை.

# 14.புதிய கற்காலக் கருவியின் சிறப்பு



...



...

தென்னிந்தியாவில் மிகச் சிறப்பான கற்கருவிகளை சேர்வராயன் மலையில் வாழ்ந்த மனிதர்கள் தயாரித்தார்கள். இங்கு 5 செ.மீ நீளமுடைய கற்கருவி முதல் 23 செ.மீ நீளமுடைய பெரிய கற்கோடாரியும் உள்ளது. மேலும் 20 க்கும் மேற்பட்ட வடிவங்களில் கற்கருவிகள் உள்ளன.

# 15.துவாரம் உடைய கல்



…



…

வட்ட வடிவ தட்டு போன்ற ஒரு கருவியைக் காண முடிந்தது. துவாரம் உள்ள ஒரு அரிய கற்கருவியும் இம்மலையில் கிடைத்தது. இது ஒழுங்கற்ற வட்ட வடிவானது. இதன் மையத்தில் 2.4 செ.மீ விட்டமுடைய துவாரம் உள்ளது. இதன் எடை 398 கிராம் ஆகும்.

# 16.கற்குவை



…

பெருங்கற்காலத்தில் வாழ்ந்த மக்கள் இறந்தால் அவர்களுக்கு கற்குவை (Cairn) என்னும் ஈமச்சின்னங்களை நிறுவினர். இந்தக் கற்குவை 2000 முதல் 3000 ஆண்டுகள் பழமையானவை. சந்நியாசி மலையில் கோபுரக் குட்டை என்னும் இடத்தில் 7 கற்குவைகள் உள்ளன.

# 17.தங்கமலை



…

தங்கமலை என்னும் இடத்தில் 7 கற்குவைகள் உள்ளன. ஒரு சமதள பாறையின் மீது இவை வரிசையாக உள்ளன. ஒரு கற்குவையின் மையத்தில் 15 செ.மீ நீளமும், 15 செ.மீ அகலமும் கொண்ட துவாரம் காணப்படுகிறது. இங்குள்ள கற்குவைகள் சுமார் 2500 ஆண்டுகள் பழமையானவை.

# 18.கல்திட்டைகள்



…

பெருங்கற்காலத்தில் இறந்தவர்களுக்கு கல்திட்டை (Dolmen) என்னும் நினைவுச் சின்னங்களை எழுப்பினர். இது டேபிள் போன்ற வடிவம் கொண்டது. இது ஓரறை மட்டும் கொண்டது. சந்நியாசி மலையில் இரண்டு கல்திட்டைகள் உள்ளன. இவை சுமார் 2500 ஆண்டுகள் பழமையானவை.

# 19.இரண்டு அறை கல்திட்டை



...

மத்திரிக்காடு என்னும் கிராமத்தில் இரண்டு அறைகளைக் கொண்ட ஒரு கல்திட்டை உள்ளது. இதனை ஊர்மக்கள் கற்கூடாரம் என்கின்றனர். ஒரு பெரிய கற்பலகையால் இது மூடப்பட்டுள்ளது. சேர்வராயன் மலையில் இது போன்ற அமைப்பு உடைய கல்திட்டை இங்கு மட்டுமே காணப்படுகிறது.

# 20.பெரிய கல்திட்டை



…

சேர்வராயன் மலையில் மிகப்பெரிய கல்திட்டை கீழ் பிலியூர் கிராமத்தில் ஐனா பாறை என்னும் இடத்தில் உள்ளது. இது 220 செ.மீ நீளமும், 170 செ.மீ அகலமும், 103 செ,மீ உயரத்தையும் கொண்டுள்ளது. இதன் உள்ளே 5 பேர் அமரலாம். இந்த கல்திட்டையின் பின்புறம் சிதைந்துள்ளது.

# 21.கல்திட்டையுடன் இணைந்த கற்குவை



…

மோட்டூர் கிராமம் செல்லும் வழியில் ஒரு பாறை சரிவின் மீது கல்திட்டையுடன் இணைந்த கற்குவை உள்ளது. பெரிய இரண்டு குத்துக்கல் மீது இரண்டு மூடு பலகையால் கல்திட்டையை உருவாக்கி அதன் மீது கற்களை அடுக்கி கற்குவையை உருவாக்கியுள்ளனர். இது சுமார் 2500 ஆண்டுகள் பழமை வாய்ந்தது.

## 22.அழகான கல்திட்டையுடன் கூடிய கற்குவை.



…

மோட்டூர் கிராமத்தை ஒட்டிய சேட்டுப்பட்டி மலைப்பகுதியில் மிக அழகான கல்திட்டையுடன் கூடிய கற்குவை உள்ளது. இது அழகான ஒரு கோவிலைப் போன்று காட்சித் தருகிறது. கற்கள் ஒன்றன் மீது ஒன்றாக, கூம்பு வடிவில் அடுக்கப்பட்டுள்ளன.

## 23.பெரிய கல்திட்டையுடன் இணைந்த கற்குவை.



…



…

சேட்டுப்பட்டி மலைப்பகுதியில் மிகப் பெரிய கல்திட்டையுடன் இணைந்த கற்குவை காணப்படுகிறது. 200 செ.மீ நீளமுடைய கல்திட்டையின் மீது 10

அடி உயரத்திற்கு கற்குவை உள்ளது. இதை ராமர் வீடு என்கின்றனர். இப்பகுதியில் இது ராமர் கோவிலாக கருதப்படுகிறது.

# 24.பாண்டியன் குழி



…

மேலூர் கிராமத்தில் முதுமக்கள் தாழியைப் புதைத்த குழி உள்ளது. இதை பாண்டியன் குழி என்கின்றனர். இது ஒரு ஈம புதைகுழி ஆகும். இது பெருங்காலத்தைச் சேர்ந்தது. சுமார் 1500 – 2000 ஆம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாக இருக்கலாம் எனத் தெரிய வருகிறது.

# 25.முதுமக்கள் தாழி



…

கீரைக்காடு புத்தூர் என்னும் கிராமத்தில் ஒரு முதுமக்கள் தாழி காணப்படுகிறது. இது 95 செ.மீ உயரம் கொண்டது. வாய்ப்பகுதி 19 செ.மீ விட்டமுடையது. இது சுமார் 60 முதல் 75 கிலோ வரை எடை இருக்கலாம். தாழியின் மீது தொப்புள் கொடி போன்ற அமைப்பு உள்ளது.

# 26.முதுமக்கள் தாழிக் குழி



…

புளியங்கடைக் கிராமத்தில் கொள்ளுக்காடு என்கிற காட்டுப்பகுதியில் முதுமக்கள் தாழிக் குழி ஒன்று உள்ளது. இது தரைக்குக் கீழே 2 மீட்டர் ஆழமும், 1.58 மீட்டர் விட்டமும் கொண்டது. இதன் மேல்பகுதி திறந்து மூடும் வகையில் வாய்ப்பகுதி உள்ளது. இது 1500 ஆண்டுகள் பழமை வாய்ந்தது ஆகும்.

# 27.நெடுங்கல்



...

பெருங்கற்காலத்தில் இறந்த ஒருவனை அடக்கம் செய்த இடத்தின் புதை குழி மீது ஒரு நெடுங்கல்லை (Menhir) நட்டு வைக்கும் பழக்கம் இருந்தது. சந்நியாசி மலையில் 10 நெடுங்கற்கள் உள்ளன. இவை சுமார் 1500 ஆண்டுகள் பழமை வாய்ந்தவையாகக் கருதப்படுகிறது.



…

பக்கோடா பாயிண்ட் என்னும் இடத்தில் வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட 3 பிரமிடு வடிவ கற்கோபுரங்கள் உள்ளன. இவை சுமார் 4000 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டவை. ஆகவே இவை பெருங்கற்காலத்தில் வாழ்ந்த மக்களால் கட்டிய கற்கோட்டை எனக் கருதலாம்.

# 29.கற்கோபுரம்



...



...

கொட்டச்சேடு கிராமத்தில் உள்ள பெருமாள் கோவிலின் பின்புறம் அமைந்துள்ள மலைக் குன்றின் பாறை மீது ஒரு கற்கோபுரம் காணப்படுகிறது. இது 8 அடி உயரமும், 8 ½ அடி அகலமும் கொண்டது.

இந்த கற்கோபுரம் பல நூற்றாண்டுகளுக்கு முன் கட்டப்பட்டதாகத் தெரிகிறது.

## 30. கல்வெட்டுடன் கூடிய நடுகல்



…

ஒலக்கோடு என்னும் கிராமத்தில் 7 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நடுகல் உள்ளது. பலகைக் கல்லில் வீரன் புடைப்புச் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளான். வீரனுக்கு மேல் புறமும், இடது புறமும் வட்டெழுத்துகளால் எழுதப்பட்டுள்ளன. இதில் மொத்தம் 14 வரிகளில் எழுத்துகள் உள்ளன.

# 31.புலிக்குத்திப் பட்டான் கல்



…

நாகலூர் என்னும் கிராமத்தில் 16 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த புலிக்குத்திப் பட்டான் கல் உள்ளது. இது 100 செ.மீ உயரமும், 60 செ.மீ அகலமும் உடையது. வீரன் ஈட்டியை புலியின் மார்பில் செலுத்தும் வகையில் புடைப்புச் சிற்பம் நடுகல்லில் செதுக்கப்பட்டுள்ளது.

# 32.பன்றிக் குத்திப்பட்டான் கல்



…

முளுவி கிராமத்தில் 2 அடி உயரத்தில் ஒரு நடுகல் உள்ளது. வீரனின் கையில் வில்லும், அம்பும் உள்ளது. வில்லில் இருந்து அம்பு எய்தி பன்றியைக் கொல்லும் சிற்பம் இதில் இடம் பெற்றுள்ளது. இது காட்டுப் பன்றி தாக்கி உயரிழந்த வீரனுக்காக எடுக்கப்பட்ட நடுகல் ஆகும்.

## 33.காட்டெருது காத்த பட்டான் கல்



…

வாழவந்தி கிராமத்தில் ஒரு பலகைக் கல்லில் வீரனும், காட்டெருதின் உருவமும் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. காட்டெருதை வனப்பகுதியில் பிடித்த போது வீரன் இறந்து விட்டான். அவனுக்காக இந்த நடுகல் 16 ஆம் நூற்றாண்டில் எடுக்கப்பட்டது.

# 34.வாழவந்தி புலிக்குத்தி நடுகல்



…

வாழவந்தி கிராமத்தில் கற்பலகையில், வீரனும், புலியும் புடைப்புச் சிற்பமாக காணப்படுகிறது. கற்பலகை ஒரு கோபுரம் போல் காட்சித் தருகிறது. வீரன் இரண்டு கைகளாலும் ஈட்டியைப் பிடித்து புலியின் மார்பில் பாய்ச்சுகின்றான். இந்த நடுகல் 16 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது ஆகும்.

# 35.மூன்று நடுகற்கள்



…

நடூர் கிராமத்தில் நாயின் தியாகத்தைப் போற்றும் வகையில் ஒரு நடுகல் உள்ளது. இதன் அருகில் இரண்டு புலிக்குத்திப் பட்டான் கல் இடம் பெற்றுள்ளது. வீரனின் தியாகத்தைப் போற்றும் வகையில் எடுக்கப்பட்டது. இவை 12 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை ஆகும்.

## 36.மான் குத்திப் பட்டான் கல்



…

குண்டூர் கிராமத்தில் மான் குத்திப்பட்டான் கல் ஒன்று உள்ளது. காட்டு மான் வேட்டையில் இறந்த வீரனுக்காக எடுக்கப்பட்ட நடுகல் இதுவாகும். இது 3 அடி உயரமும், 2.5 அடி அகலமும் கொண்டது. இது 10 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு அரியவகை நடுகல் ஆகும்.

# 37.புலிக்குத்தி ராமன்



…

கொட்டச்சேடு கிராமத்தின் அருகில் புலிக் குத்தி ராமன் கோவில் உள்ளது. இங்கு புலிக்குத்திப் பட்டான் கல் மற்றும் பன்றிக் குத்திப் பட்டான் கல் என இரண்டு நடுகற்கள் உள்ளன. இவை 17 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. மக்கள் இவற்றை தெய்வமாக வழிபட்டு வருகின்றனர்.

# 38.பூசலில் இறந்த வீரனின் நடுகல்



…

காக்கம்பாடி கிராமத்தில் ஒரு நடுகல் உள்ளது. இதில் உள்ள வீரன் இடதுபுற கொண்டை போட்டுள்ளான். ஒரு வீரன் என்பதைக் காட்டும் வகையில் மீசை உள்ளது. இது பூசலில் இறந்த வீரனுக்காக எடுக்கப்பட்ட நடுகல் ஆகும். இது 18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.

# 39.வீரக்கல்



…

அரங்கம் கிராமத்தில் இரண்டு நடுகற்கள் உள்ளன. போர் புரியும் போது ஒருவனின் இடுப்புப் பகுதியில் அம்பு பாய்ந்துள்ளது. மற்றொரு வீரனின் மார்பில் அம்பு பாய்ந்துள்ளது. வீர மரணம் அடைந்த இந்த இரண்டு வீரர்களுக்காக நடுகல் இங்கு எடுக்கப்பட்டது.

# 40.கல்வெட்டுடன் கூடிய பன்றிக்குத்தி நடுகல்



…

மாரமங்கலம் கிராமத்தில் உள்ள நடுகல்லில் ஒரு வீரன் நீண்ட ஈட்டியால் ஒரு பெரிய காட்டுப் பன்றியைக் குத்திக் கொல்வதை சிற்பமாக செய்துள்ளனர். இந்த நடுகல்லில் கல்வெட்டுச் செய்தியும் இடம் பெற்றுள்ளது. இது 18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நடுகல் ஆகும்.

# 41.வாணீஸ்வரர் கோவில்



…

கோவிலூர் என்னும் கிராமத்தில் வாணீஸ்வரர் என்னும் சிவன் கோவில் உள்ளது. இதைச் சுற்றி 4 கல்வெட்டுகள் உள்ளன. இங்குக் காணப்படும கல்வெட்டுகள் 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. அக்காலத்தில் கோவிலூரை பெருமாமலை என்று அழைத்து வந்தனர்.

# 42.கேளையூர் கல்வெட்டு



…

கேளையூர் கிராமத்தில் திரௌபதி அம்மன் கோவில் அருகில் ஒரு கல்வெட்டு காணப்படுகிறது. இந்தக் கல்வெட்டில் சேல நாடு பற்றியும், கோவிலுக்கு தானம் வழங்கிய செய்தியும் இடம் பெற்றுள்ளது. இது 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஆகும்.

# 43.கோமாரிக் கல்



…

கால்நடைகளைக் காப்பாற்ற மந்திரக் கட்டங்கள் நிறைந்த பலகைக் கற்களை ஊரின் எல்லையில் நட்டு வைத்தனர். ஆடு, மாடுகளை அங்கு அழைத்துச் சென்று அக்கல்லுக்கு பூசை செய்தனர். கோமாரிக் கல்லின் காலம் என்பது கி.பி.14 முதல் 18 ஆம் நூற்றாண்டு வரை இருக்கலாம்.

# 44. இரும்புக் காலம்




…

சேலத்தில் இருந்து ஏற்காட்டிற்கு சாலை அமைக்கும் பணி 1903 இல் நடந்தபோது பெரிய கோடாரி மற்றும் நீண்ட கைப்பிடியுடன் கூடிய ஒரு அழகான கொடுவாள் கிடைத்தது. இவை முண்டகாம்பாடியை ஒட்டிய பகுதியில் கிடைத்தன. இவை 1800 ஆண்டுகள் பழமையானவை.

# 45.சுடுமண் பொம்மைகள்




...




...

முளுவி கிராமத்தில் ஸ்காட்போர்த் எஸ்டேட்டில் 1885 ஆம் ஆண்டு இரண்டு சுடுமண் பொம்மைகள் கிடைத்தன. இவை சிவப்பு நிறம்

கொண்டவை. சுடுமண் பொம்மையின் தலையில் சீப்பு காணப்படுகிறது. இது பெருங் கால மக்களின் பண்பாட்டுச் சான்றாகக் கருதப்படுகிறது.

# 46.பாறைக் கீறல் ஓவியங்கள்



…



…

கோவிலூர் செல்லும் பாதையில் ஒரு பாறையில் கீறல் ஓவியங்கள் உள்ளன. இப்பாறையில் மானின் உருவமும், எருதின் உருவமும் காணப்படுகின்றது. எருதின் முதுகில் போர்வை போன்று போர்த்தப்பட்டுள்ளது. இவை 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாக இருக்கலாம்.

# 47.மலையாளிகள்



…



…

சுமார் 600 ஆண்டுகளுக்கு முன்பு மலையாளிகள் காஞ்சீபுரத்தில் இருந்து சேர்வராயன் மலைக்கு வந்ததாக டக்ளஸ் ஹாமில்டன் 1870 ஆம் ஆண்டில் குறிப்பிட்டுள்ளார். மலையாளிகள் 15 ஆம் நூற்றாண்டில் இம்மலையில் குடியேறினர் என தட்சன் குறிப்பிட்டுள்ளார்

# 48.வேட்டை



…

மலையாளிகள் துப்பாக்கிகளையும், பிற ஆயுதங்களையும் ஏந்தி வேட்டைக்குச் சென்றனர். 1900 ஆம் ஆண்டு ஒரு புலியைக் கொன்றனர். அதனை ஒரு சட்டத்தில் நிற்கும்படி கட்டி தப்பட்டை முழக்கத்தோடு, ஆடியவர்களாக எற்காட்டைச் சுற்றி எடுத்துச் சென்றனர்.

# 49.பன்றி வேட்டை



…

மலையாளிகள் வேட்டையாடுவதில் மிகுந்த ஆர்வம் கொண்டவர்கள். ஆங்கிலேயர்களுடன் சேர்ந்து வேட்டைக்குச் சென்றனர். அப்போது துப்பாக்கிச் சுடுவதையும் கற்றுக் கொண்டனர். பெரிய வலை விரித்து விலங்குகளைப் பிடித்தனர். அதிகளவில் காட்டுப் பன்றியை வேட்டையாடினார்கள்

# 50.காக்கம்பாடி கிராமம்



…

காக்கம்பாடி கிராமத்தை 1870 ஆம் ஆண்டில் நிக்கோலஸ் அண்டு கம்பெனியார் ஒரு புகைப்படமாக எடுத்துள்ளனர். குடிசைகள் ஒரு தொகுதியாக தேன் கூடுகள் (Bee Hives) போல காட்சித் தருகின்றன. தற்போது அக்கிராமத்தில் குடிசைகளே கிடையாது.

## 51.கூம்பு வடிவ வீடுகள்



…

சேர்வராயன் மலையில் 1960 ஆம் ஆண்டிற்கு முன்பு கூம்பு வடிவ குடிசை வீடுகள் இருந்தன. வீடு என்பது ஒரு அறை கொண்டது. இது வட்ட வடிவமானது. வீட்டின் உள்ளே ஒரு அட்டாலி எனும் பரண் காணப்படும். 2021 ஆம் ஆண்டின் கணக்குப்படி 6 கூம்பு வடிவ வீடுகளே உள்ளன.

# 52.தானியக்குதிர்



…

சிறிய குடிசை வடிவில் ஆன தானியக் குதிர்கள் தற்போது 10 மட்டுமே உள்ளன. இவை தொம்பை, கொடாம்பை, குடும்பை என அழைக்கப்படுகின்றன. இதன் உள்ளே 2 முதல் 4 அறைகள் உள்ளன. இதில் சிறு தானியங்களைக் கொட்டி சேமித்து வைக்கின்றனர்.

# 53.பானைக் குதிர்.



…

தானியங்களை வீட்டின் உள்ளே பெரிய பானைகளில் சேமித்து வைக்கும் பழக்கம் இருந்தது. முளுவி கிராமத்தில் 100 ஆண்டுகள் பழமை வாய்ந்த பானைக் குதிர் ஒன்று உள்ளது. இது 4 அடி உயரமும், 8 அடி சுற்றளவும் கொண்டது. இதற்கு இரண்டு புறமும் வாய் உள்ளது.

## 54.கோட்டை



...

கோட்டை என்பது மிகப்பெரிய பந்து போன்றது. சாமை வைக்கோல் அல்லது வாளாம் புல்லைக் கொண்டு கோட்டையைக் கட்டுகின்றனர். இதன் உள்ளே இருக்கும் பீன்ஸ் அல்லது பருப்பு வகைகள் இரண்டு ஆண்டு வரை கெடாமல் இருக்கும். தற்போது கோட்டை கட்டுதல் என்பது இல்லை.

# 55.நடை கிணறு



...

நடை கிணறு (Walking well) என்பது புனல் வடிவம் அல்லது தலைகீழ் கூம்பு வடிவம் கொண்டது. கிணற்றின் மேல் பரப்பு அகன்றும் கீழே செல்ல செல்ல குறுகிக் கொண்டே போய் தரை ஒரு அடி விட்டத்துடன் முடிகிறது. இந்த வடிவக் கிணறு மதூர் கிராமத்தில் ஒன்று மட்டுமே உள்ளது.

# 56.குழிக் கிணறு



…

புளியங்கடை கிராமத்தில் ஒரு குழிக் கிணறு உள்ளது. இது மிகவும் ஆச்சரியமானது. இது வட்ட வடிவமானது. 27 அங்குல விட்டமும், 5 அடி ஆழமும் கொண்டது. இது போன்ற ஒரு குழி கிணற்றை வெட்டுவது சிரமம். இக்கிணற்றின் உள்ளே ஒருவர் மட்டுமே நிற்க முடியும்.

# 57.திருகை



...

பழங்காலத்தில் மனிதர்கள் தானியத்திலிருந்து மாவை அரைத்து எடுப்பதற்காக திருகை (Quern) என்னும் கல் திருகையைப் பயன்படுத்தினர். திருகையை 300 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே பயன்படுத்தி வந்துள்ளனர். தற்போது திருகையைப் பயன்படுத்துவது கிடையாது.

# 58.மரத்திருகை



...

சாமை, தினை, வரகு, மணிவரகு போன்ற சிறு தானியங்களின் மேல் உள்ள உமியை நீக்கி அரிசி எடுப்பதற்கு மரத்திருகை உதவுகிறது. சிறு தானியங்களை செம்மண் கலந்து, உலர வைக்கின்றனர். அதன் பிறகு மரத் திருகையில் இட்டு சுற்றும்போது மேல் உமி நீங்கி அரிசி கிடைக்கிறது

.

# 59.மர உரல்



…

மலைக் கிராமங்களில் அதிகம் பயன்படுத்தப்பட்டு வந்தது மர உரல் ஆகும். இது பழங்காலக் கருவி. ஒரு உரல் 50 ஆண்டு காலம் உழைக்கும். சாமை, தினை. வரகு போன்ற சிறு தானியங்களை உரலில் இட்டு தீட்டுவார்கள். மாவு இடிக்கவும் இது பயன்படுகிறது.

# 60.சேர்வராயன் கோவில்



...



...

சேர்வராயன் கோவில் என்பது சேர்வராயன் மலையில் வாழக்கூடிய பழங்குடி இன மக்களின் கோவிலாகும். இது ஒரு இருண்ட குகை. அதனுள் சேர்வராயன் சுவாமி மற்றும் காவேரி அம்மன் ஆகியோர் வீற்றிருக்கின்றனர். இக்கோவில் சுமார் 200 ஆண்டுகள் பழமையானது.

# 61.கெடை.



…

மாட்டுப் பொங்கல் அன்று மாடு, ஆடுகளை அடைத்து வைத்திருக்கும் பட்டியின் வாயிலின் முன்பு கெடை அமைக்கின்றனர். கெடை என்பது இரண்டு மூங்கில்களை வளைத்து அதில் வாழை இலை மற்றும் மலர்களால் அலங்கரிக்கப்படுவதாகும். இது 20 முதல் 40 அடி உயரம் வரை இருக்கும்.

# 62.காவல் நிலையம்




...

ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தின் போது 1894 ஆம் ஆண்டு காவல் நிலையம் கட்டடப்பட்டது. ஒரு இன்ஸ்பெக்டரும் 14 காவலர்களும் நியமிக்கப்பட்டனர். இன்ஸ்பெக்டருக்கு குதிரையும் மற்ற காவலர்களுக்கு குதிரை பூட்டிய சாரட் வண்டியும் கொடுக்கப்பட்டது.

# 63.அரசியல் கைதிகள்




…




…

ஆப்கானிஸ்தானைச் சேர்ந்த அமீர் அயூப் கானின் 7 மகன்கள், 13 அரசக் குடும்பத்துப் பெண்கள், 6 குழந்தைகள் மற்றும் 13 வேலைக்காரர்கள் ஆகியோரை அரசியல் கைதிகளாக 1917 ஆம் ஆண்டில் கிரேஞ்சு

மாளிகையில் வைத்திருந்தனர். அவர்களை 1918 ஆம் ஆண்டு ஜனவரி 1 அன்று அலகாபாத் அனுப்பி வைத்தனர்.

# 64.தபால் நிலையம்



…

ஏற்காட்டில் தபால் நிலையம் 1884 ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்டது. 1954 – 1960 ஆம் நிதியாண்டில் தபால் நிலைய கட்டடம் விலைக்கு வாங்கப்பட்டது. இது ஐரோப்பியருக்குச் சொந்தமாக இருந்தது. இக்கட்டடத்தின் நுழைவு வாயில் மிகவும் அழகானது.

# 65.மருத்துவமனை



…

ஏற்காட்டில் 1872 ஆம் ஆண்டு ஒரு டிஸ்பென்சரியை ஆரம்பித்தனர். குளிர்ப் பிரதேசம் என்பதால் குளிர் காய்வதற்கான வசதியும் இடம் பெற்றிருந்தது. ஆண்கள் வார்டிற்கு நான்காம் ஜார்ஜ் என்றும், பெண்கள் வார்டிற்கு விக்டோரியா வார்டு என்றும் பெயரிட்டிருந்தனர்.

# 66.மைல் கல்




…

சேர்வராயன் ரயில் நிலையம் 1860 ஆம் ஆண்டில் அமைக்கப்பட்டது. பர்ஸ் பங்களா நுழைவு வாயில் அருகில் ஒரு மைல் கல் உள்ளது. அதில் சேர்வராயன் ரயில் நிலையம் எவ்வளவு தொலைவில் உள்ளது என்பது குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம்.

# 67.டோலி



...

ஏற்காட்டிற்கு சாலை வசதி அமைக்காத காலத்தில் இங்கு வாழ்ந்த ஆங்கிலேயர்கள் மற்றும் ஆங்கிலேய சுற்றுலாப் பயணிகள் டோலி மூலம் பயணம் செய்தனர். டோலியில் அமர வைத்து கூலியாட்கள் அவர்களை சுமந்து சென்றனர். அதே போல் சேலத்திற்கும் திரும்பினர்.

# 68.டோலி கட்டித் தூக்கிச் செல்லுதல்



…

மலைக் கிராமங்களில் போதிய சாலை வசதி இல்லாதக் காலத்தில் நடக்க முடியாதவர்கள், கர்ப்பிணிப் பெண்கள் போன்றவர்களை மருத்துவமனைக்கு டோலி கட்டித் தூக்கிச் சென்றனர். இந்த நிலை 1987 ஆம் ஆண்டு வரை நீடித்தது. ஆனால் கொடிக்காடு கிராமத்தில் இது தொடர்கிறது.

## 69.சாலை



...

சேலம் முதல் ஏற்காடு வரை சாலை அமைக்கும் பணி 1903 ஆண்டில் முடிவடைந்தது. சாலை அமைக்கும் பணி 30 ஆண்டுகள் நடைபெற்றன. ஏரிக்கு அருகில் கோடைக் காலத்தில் பாலமும், பாதையும் அமைக்கப்பட்டன. இதன் பிறகு சாலை சேலத்துடன் இணைந்தது.

# 70.கார் பயணம்




…

பாண்டிச்சேரி கவர்னராக இருந்த மான்சியர் கிப்லாய் என்பவரே தனது காரில் முதன் முதலாக இச்சாலையில் பயணம் செய்தார். இது 1911 ஆம் ஆண்டில் நடந்தது. இவரின் கார் ஏற்காடு வந்து சேர 5 மணி நேரம் ஆனது. ஏற்காட்டில் வாழ்ந்த சி.டி.ரெய்லி 1921 ஆம் ஆண்டில் கார் வாங்கினார்.

# 71.மாட்டு வண்டிகள்



…

ஏற்காட்டிற்கு சாலை வசதி அமைத்த பிறகு மாட்டு வண்டியில் பயணம் தொடங்கியது. 1920 இல் 15 முதல் 20 மாட்டு வண்டிகள் ஒன்றாக சேலத்தில் புறப்பட்டு ஏற்காட்டை அடைந்தன. ரயில் பெட்டிகள் போல் மாட்டு வண்டிகள் வரிசையாக ஊர்ந்து வந்தன.

# 72.பேருந்து



…

மக்களுக்காக பேருந்தை முதன் முதலில் இயக்கிய பெருமை NS என்ற நிறுவனத்தையே சேரும். 1925 ஆம் ஆண்டு சேலத்தில் இருந்து ஏற்காட்டிற்கு பேருந்தை இயக்கினர். அதன் பிறகு சிட்னி டயர் லாரி சர்வீஸ் தன்னுடைய போக்குவரத்தைத் தொடங்கியது.

# 73.சாலை விரிவாக்கம்



…

தார்ச்சாலை போடுவதற்காக நீராவி உருளை வாகனம் இங்கிலாந்தில் இருந்து வரவழைக்கப்பட்டது. இது 1929 ஆம் ஆண்டு ஜான் பிளவர் அண்ட் கம்பெனி என்னும் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டது. ஏற்காடு மலைப்பாதையை அமைப்பதற்கு இதை 1930 ஆம் ஆண்டில் பயன்படுத்தினர்.

# 74.60 அடி பாலம்



…

60 அடி பாலம் கட்டுவதற்காக இரும்பு தளவாடங்கள் பாம்பே கம்பெனியில் இருந்து 1902 ஆம் ஆண்டு கொண்டு வரப்பட்டது. இந்தப் பாலம் ஜார்ஜ் ஹக்கஸ் வாகான் என்பவரால் கட்டி முடிக்கப்பட்டது. இது 1987 ஆம் ஆண்டு வரை பயன்பாட்டில் இருந்தது.

# 75.பஸ் நிலையம்



…

ஆரம்பக் காலத்தில் பஸ் நிலையம் என்பது காந்திப் பூங்காவை ஒட்டிய பகுதியில் இருந்தது. பிறகு தபால் நிலையம் முன்பு மாறியது. பஸ் நிறுத்த போதிய இடவசதி இல்லாதக் காரணத்தால் 1967 ஆம் ஆண்டு, தற்போது உள்ள இடம் பஸ் நிலையமாக மாற்றப்பட்டது.

# 76.வெட்டு வாய் மலை



…

சந்நியாசி மலையில் ஒரு கணவாயை 1930 ஆம் ஆண்டில் உருவாக்கினர். இதற்கு வெட்டுவாய் மலை சந்து எனப் பெயர். இது 300 அடி நீளமும், 20 அடி உயரமும் கொண்டது. 1957 ஆம் ஆண்டில் மாயா பஜார் என்னும் திரைப்படத்தின் காட்சி இங்கு எடுக்கப்பட்டது.

# 77.லண்டன் மிஷன் பள்ளி



…

லண்டன் மிஷன் பள்ளி 1851 ஆம் ஆண்டில் துவங்கப்பட்டது. 1897 ஆம் ஆண்டு முதல் காவல் நிலையத்திற்கு எதிரே உள்ள கட்டடத்தில் செயல்பட்டது. இது கலெக்டர் லாங்கிலி என்பவருக்குச் சொந்தமானது. இது TELC என்னும் பள்ளியாக மாறி விட்டது.

# 78.சேக்ரட் ஹார்ட் பள்ளி



…

வால்டிபெர்ட் ஹெல்லி மற்றும் ஜெர்ட்ரூடு பென்ஸ் ஆகிய அருட்சகோதரிகள் 1894 ஆம் ஆண்டில் சேக்ரட் ஹார்ட் கான்வென்டை உருவாக்கினர். 1908 ஆம் ஆண்டில் ஐரோப்பியன் உயர்நிலைப் பள்ளியாக உயர்ந்தது. இது 1978 ஆம் ஆண்டில் ஆங்கிலோ இந்தியன் பள்ளியாக மாறியது.

# 79.மாண்ட்போர்ட் பள்ளி



…

ஏற்காடு என்றாலே மாண்ட்போர்ட் பள்ளி நினைவுக்கு வரும். இது 1917 ஆம் ஆண்டு ஜூன் 1 அன்று திறக்கப்பட்டது. ஆரம்பத்தில் யூரோப்பியன் ஸ்கூல் என்ற பெயரில் ஆரம்பிக்கப்பட்டது. இது 1930 ஆம் ஆண்டில் ஆங்கிலோ இந்தியன் பள்ளியாக மாறியது.

# 80.கொட்டச்சேடு பள்ளி



…

கொட்டச்சேடு என்னும் கிராமத்தில் ஒரு ஆரம்பப் பாட சாலை 1957 – 1958 ஆம் நிதியாண்டில் கட்டப்பட்டது. இந்தப் பள்ளியின் கட்டட மதிப்பு ரூ.7400.00 ஆகும். சென்னை ராஜ்ய முதல் அமைச்சராக இருந்த கே.காமராஜ் அவர்களால் 1958 ஆம் ஆண்டு ஜூன் 10 அன்று இப்பள்ளி திறந்த வைக்கப்பட்டது.

# 81.மவுண்டன் ஹோம்



…

வில்லியம் மில்லர் என்பவர் 1891 ஆம் ஆண்டில் மவுண்டன் ஹோம் (Mountain Home) ஒன்றைக் கட்டினார். அது ஈச்சங்காடு பங்களா என அழைக்கப்பட்டது. இரண்டாம் உலகப் போரின் போது இது ராணுவ மருத்துவமனையாகப் பயன்படுத்தப்பட்டது.

# 82.ஹோலி ட்ரினிட்டி சர்ச்



…

இந்த தேவாலயம் 1853 ஆம் ஆண்டு கட்டப்பட்டது. இதன் கட்டட அமைப்பு புதுமையானது. இதன் நுழைவு வாயில் வளைவாக வடிவமைக்கப்பட்டுள்ளது. இந்த ஆலயம் 1935 இல் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. இதற்கு சாம்பல் நிற வண்ணம் பூசப்பட்டது.

# 83.புனித சூசையப்பர் ஆலயம்



…

கோவில்மேடு என்னும் பகுதியில் புனித சூசையப்பர் ஆலயம் 1859 ஆம் ஆண்டு கட்டப்பட்டது. இங்கு மணிக் கோபுரமும் உள்ளது. இதில் உள்ள கடிகாரம் மணி அடிக்கும். ஒவ்வொரு மணி நேரத்திற்கும் ஏற்ப குறிப்பிட்ட எண்ணிக்கையில் மணி அடித்து, நேரத்தைத் தெரிவிக்கும்.

## 84.ஆற்காடு லுத்தரன் சர்ச்



...

அசம்பூர் கிராமத்தில் 1866 ஆம் ஆண்டு ஆற்காடு லுத்தரன் சர்ச் கட்டடப்பபட்டது. முதலாம் உலகப் போரின் போது பிடிபட்ட ஜெர்மன் போர் வீரர்களை ஈச்சங்காடு பங்களாவில் கைதிகளாக வைத்திருந்தனர். அவர்கள் இங்கு மணி கோபுரத்தை 1918 ஆம் ஆண்டில் கட்டிக் கொடுத்தனர்.

# 85.சி.எஸ்.ஐ. ஆலயம்



...

லெக்லர் பாதிரியாரின் மருமகன் மோரிஸ் பிலிப்ஸ் என்பவர் 1869 ஆம் ஆண்டில் ஏற்காட்டில் நிலத்தை வாங்கினார். அதில் சி.எஸ்.ஐ. ஆலயத்தை 1872 ஆம் ஆண்டில் கட்டி முடித்தனர். சேர்வராயன் மலையில் தமிழ் பேசும் தொழிலாளர்களுக்காக இது கட்டப்பட்டது.

# 86.இசை பாடும் மணி கோபுரம்



...



...

தூய இருதய ஆண்டவர் ஆலயம் 1934 ஆம் ஆண்டில் கட்டப்பட்டது. ஆலயத்திற்குப் பின்புறம் அழகிய மணி கோபுரம் உள்ளது. இதில் 7 வெண்கல மணிகளும் அதை இயக்க ஆர்மோனியப் பெட்டி போன்ற

அமைப்பு உள்ளது. கட்டைகளை விரலால் தட்டினால் ஏழு ஸ்வரங்களின் இசை ஒலிக்கும.

# 87.மொசைக் ஓவியம்



...

ரெட்ரீட் தேவாலயத்தின் பலி பீடத்திற்குப் பின்புறம் சுமார் 400 சதுரடி பரப்பளவில் ஏசு கிறிஸ்துவின் மொசைக் ஓவியம் இடம் பெற்றுள்ளது. பல்வேறு நிறங்களைக் கொண்ட சிறு, சிறு, வண்ணத் துண்டுகளால் ஆன டைல்ஸ்களை ஒட்டி இந்தச் சுவர் ஓவியம் உருவாக்கப்பட்டது.

# 88.நாகலூர் மசூதி



…

இரண்டாம் உலகப் போரின் போது ஆப்கானிஸ்தானைச் சேர்ந்த அப்துல் காஸிம் என்பவர் ஈச்சங்காடு என்னும் இடத்தில் 1939 முதல் 1945 ஆம் ஆண்டு வரை அரசியல் கைதியாக இருந்தார். அவரின் நிதி உதவியால் நாகலூரில் இந்த மசூதி 1943 ஆம் ஆண்டில் கட்டப்பட்டது.

# 89.கிரேஞ்சு மாளிகை



...

இரண்டு அடுக்கு கொண்ட கிரேஞ்சு மாளிகையை ஜி.ரிச்சர்டுசன் என்பவர் 1851 ஆம் ஆண்டில் கட்டினார். இது கப்பலின் வடிவமைப்பைக் கொண்டது. ஆங்கிலேய அதிகாரிகள் இந்த மாளிகைக்கு வந்து தங்கி ஓய்வு எடுக்கும் இடமாக அப்போது விளங்கியது.

# 90.மெல்ரோஸ்



…

லெக்லர் என்கிற பாதிரியார் 1841 ஆம் ஆண்டு ஏற்காடு வந்தார். அவர் ஒரு குடிலைக் கட்டினார். அதற்கு மெல்ரோஸ் எனப் பெயரிட்டார். இது ஆங்கிலேயர்கள் வாழ்வதற்காக கட்டப்பட்ட முதல் குடிலாகும். பிறகு ஓட்டு வீட்டைக் கட்டினர். தற்போது இந்த வீடு கிடையாது.

# 91.ராம் பங்களா



…

கார்ல் ராம் என்பவர் 1860 ஆம் ஆண்டில் ஒரு பங்களாவை 3500 சதுரடி பரப்பளவில் கட்டினார். இவர் ஒரு பொறியாளர் என்பதால் மிக அழகாக வடிவமைத்தார். அகன்ற படிகள் வழியாக மேலே சென்று போர்ட்டிகோவை அடையலாம். தற்போதும் ராம் பங்களா என்றே அழைக்கப்படுகிறது.

# 92.கண்ணாடி பங்களா



…

ஏற்காட்டில் ஐந்து ரோடு என்னும் பகுதியில் கண்ணாடி பங்களா உள்ளது. இதை ராம் (Rahm) என்பவர் கட்டினார். இந்த மாளிகை முழுவதும் கண்ணாடிகள் நிறைந்ததாக காணப்படுகிறது. ஆகவேதான் இதை கண்ணாடி மாளிகை என அழைத்தனர்.

# 93.பர்ஸ் பங்களா



…

பர்ஸ் பங்களா என்பது மிகவும் பிரபலமானது. இது ராபின்சன் என்கிற ஆங்கிலேயருக்கு சொந்தமாக இருந்தது. இந்த பழைய பங்களாவில் ஆங்கிலேய முதலாளியின் படமும் இடம் பெற்றுள்ளது. திருமணம் நடத்த இந்த பங்களாவை வாடகைக்கு விடுகின்றனர்.

# 94.இங்கிலீஸ் லைப்ரரி




…

ஏற்காட்டில் பிரிட்டிஷ் ஆட்சியர் காலத்தில் ஒரு நூலகம் கட்டடப்பட்டது. இதனை இங்கு வாழும் மக்கள் இங்கிலீஸ் லைப்ரரி (English Library) என அழைப்பார்கள். இது 1875 ஆம் ஆண்டில் துவங்கப்பட்டது. 1888 ஆம் ஆண்டில் நூலகக் கட்டிடம் விரிவு படுத்தப்பட்டது.

# 95.ஷார்ட் நினைவு பாரிஸ் ஹால்



...

டாக்டர் ஜான் ஷார்ட் என்பவர் ராணுவத்தில் அறுவை சிகிச்சை நிபுணராகப் பணிபுரிந்தார். பாம்புக் கடிக்கு தடுப்பூசி மருந்தைக் கண்டுபிடித்தார். இவர் 1889 ஆம் ஆண்டு இயற்கை எய்தினார். இவரின் நினைவாக இந்த இல்லத்திற்கு ஷார்ட் நினைவு பாரிஸ் ஹால் எனப் பெயரிடப்பட்டது.

# 96.ராபர்ட் புரூஸ் பூட் கல்லறை




…

இந்தியாவின் தொல் பழங்காலத்தின் தந்தை எனப் போற்றப்படுபவர் ராபர்ட் புரூஸ் பூட் ஆவார். இவர் 1863 ஆம் ஆண்டு அத்திரப்பாக்கம் பகுதியில் பழங்கற்கால வெட்டுக் கருவியைக் கண்டுபிடித்தார். இவர் 1912 ஆம் ஆண்டு டிசம்பர் 29 அன்று இறந்தார். இவரது கல்லறை ஏற்காட்டில் உள்ளது.

# 97.பீட்டர் பெர்சிவல் கல்லறை




…

கிறிஸ்துவ மதத்தின் வேத நூலான பைபிளை முதன் முதலில் இலங்கைத் தமிழில் மொழி பெயர்த்த அறிஞர் பீட்டர் பெர்சிவல் ஆவார். சென்னை பிரசிடென்சி கல்லூரியில் இலக்கியத் துறை பேராசிரியராகவும் பணிபுரிந்தார். ஏற்காட்டில வாழ்ந்து 1882 ஆம் ஆண்டில் இயற்கை எய்தினார்.

# 98.ஐரோப்பிய திருமணம்



A family gathering of Robert Bruce Foote(22 Sep 1832- 29 Dec 1912) (middle row, seated, 5th from left, and Henry Bruce Foote, last row, standing, first from left), along with other family members, at the wedding of Foote's granddaughter, Iris, 'Binks' with Angus Urquhart. Foote's daughter Violet Anne (husband CG Lechler) can be seen standing to the right of the bride. Bruce's Father in Law was the famous Rev Peter Percival (1803- 1882) whose daughter Elizebeth Ann married Robert Bruce . Other Planters of Yercaud M.S. Hight, E. King Harman, Herbert W. Leeming of Scotsforth Estate, F.D. Short, R.F. Carey, Thurston Short, and other planters and residents.

…

ராபர்ட் புரூஸ் பூட் அவர்களின் பேத்தி ஐரிஸ் திருமணம் 1900 ஆம் ஆண்டில் நடந்தபோது எடுத்த படத்தில். குடும்பத்தினர், காபித் தோட்ட அதிபர்கள் எம்.எஸ்.ஹைட், கிங் ஹார்மன், லீமங், ஷார்ட், கேரே, தர்ஸ்டன் ஷார்ட் என பல பிரபலங்கள் உள்ளனர்.

## 99.கத்தி வடிவ பாட்டில்



...

ஆங்கிலேயர் பயன்படுத்திய கத்தி வடிவ பாட்டில் ஏற்காட்டில் கண்ணையன் என்பவரிடம் உள்ளது. இதற்கு சிகப்பு நிறம் கொண்ட வெல்வெட் உறையும் உள்ளது. உறையில் இருந்து கத்தியை வெளியே எடுத்த பிறகுதான் அது கத்தி அல்ல என்றும், அது ஒரு மது பாட்டில் என்றும் தெரிந்தது.

# 100.மரகத ஏரி


LAKE OF YERCAUD, SHERVAROY HILLS.

…

கடல் மட்டத்தில் இருந்து 4448 அடி உயரத்தில் எரி அமைந்துள்ளது. இதை ஆங்கிலேயர்கள் மரகத ஏரி (Emerald Lake) என அழைத்தனர். டக்ளஸ் ஹாமில்டன் என்பவர் ஒரு ராணுவ அதிகாரி. இவர் 1862 ஆம் ஆண்டில் முதன் முதலாக இந்த ஏரியை ஓவியமாக வரைந்தார்.

# 101.பெரிய ஏரி



…

சேர்வராயன் மலையில் உள்ள ஏரிகளில் பெரியது ஏற்காடு ஏரியாகும். இது 12 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. இதில் சுற்றுலாப் பயணிகள் படகு சவாரி செய்கின்றனர். இந்த ஏரியை 1875 ஆம் ஆண்டு நிக்கல்சன் கம்பெனி முதன் முதலாகப் புகைப்படம் எடுத்தது.

# 102.கிளியூர் நீர்வீழ்ச்சி



…

டக்ளஸ் ஹாமில்டன் என்பவர் 1862 இல் கிளியூர் நீர்வீழ்ச்சியைப் புகைப்படமாக வரைந்துள்ளார். இது 110 அடி உயரத்தில் இருந்து பாறையில் தாவி அருவியாகக் கொட்டுகிறது. இந்த நீர் வீழ்ச்சியில் 260 படிக்கட்டுகள் உள்ளன. இது ஒரு பிரபலமான சுற்றுலா இடமாகும்.

# 103.ஜூப்ளி நீர்வீழ்ச்சி



DEVIL'S BRIDGE, MOBERLY FALLS, SHEVAROY HILLS.

...

ஆங்கிலேயர்கள் இதை மோபெர்லி நீர்வீழ்ச்சி என அழைத்தனர். நீர் வீழ்ச்சியின் மேல் பகுதியில் பாலம் போன்ற அமைப்பு காணப்படுகிறது. இதை டெவில்ஸ் பிரிட்ஜ் என்றனர். நிக்கோலஸ் கம்பெனி 1870 களில் இதைப் புகைப்படமாக எடுத்துள்ளது. தற்போது இது இல்லாமல் போய் விட்டது.

# 104.மணிப் பாறை



…

இந்தியத் தாவரவியல் மதிப்பீட்டு ஆராய்ச்சித் தோட்டத்தில் (BSI) மணிப்பாறை உள்ளது. இது 25 அடிக்கு 25 அடி சுற்றளவு கொண்டது. இது 120 டன் எடை இருக்கலாம். இதனை ஒரு கல் அல்லது சுத்தியல் கொண்டு தட்டினால் அதிலிருந்து வெண்கல மணி ஓசை கேட்கிறது.

# 105.நார்டன் பங்களா



…

ஏர்ட்லி ஜான் நார்டன் என்பவர் மிகவும் பிரபலமான குற்றவியல் வழக்கறிஞர், எழுத்தாளர் மற்றும் அரசியல்வாதி ஆவார். இவர் இந்திய அலுமினிய கம்பெனியை 1900 ஆம் ஆண்டில் சேலத்தில் ஆரம்பித்தார். ஏற்காட்டில் ஒரு அழகிய பங்களாவைக் கட்டினார்.

# 106.லேடிஸ் சீட்



…

சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே லேடிஸ் சீட் என்னும் சுற்றுலாத் தலம் இருந்து வருகிறது. ஒரு ஆங்கிலேய பெண்மணி தினமும் மாலையில் இங்குள்ள பாறையில் அமர்ந்து இயற்கையை ரசித்து வந்தார். அதன் காரணமாக லேடிஸ் சீட் எனப் பெயர் வந்தது.

# 107.முதல் உலகப் போரின் நினைவுச் சின்னம்



…

சேர்வராயன் மலையில் இருந்து பல வீரர்கள் முதலாம் உலகப் போரில் பங்கெடுத்தனர். இப்போரில் நான்கு இளம் வீரர்கள் மரணமடைந்தனர். இந்த வீரர்களின் சேவையைப் போற்றும் வகையில் 20 அடி உயரத்தில் நினைவுச் சின்னம் அமைக்கப்பட்டுள்ளது.

# 108.சூரிய கடிகாரம்



…

ரெட்ரீட் என்னும் இடத்தில் உள்ள கால்பந்து மைதானத்தில் ஒரு சூரிய கடிகாரத்தை 1960 இல் நிறுவியுள்ளனர். இதற்கு பாருசி சூரிய கடிகாரம் என்று பெயர். மாதத்தின் அடிப்படையில் சூரியனின் நிழல் படும் கோட்டைக் கணக்கிட்டு நேரத்தை அறிந்து கொள்ளலாம்.

# 109.வெள்ளை யானைப் பல்



…

கீந்துக்காடு வனப்பகுதியில் 120 அடி உயரத்தில் வெள்ளை நிறம் கொண்ட பெரிய குன்று உள்ளது. இது சூரிய ஒளியில் கண்ணைக் கூசச் செய்யும் அளவிற்கு பிரகாசமானது. பார்ப்பதற்கு உருளை வடிவில் தெரியும். இதற்கு வெள்ளை யானைப் பல் என ஆங்கிலேயர்கள் பெயரிட்டுள்ளனர்.

## 110.சிறிய வெள்ளை யானைப் பாறை



...

குண்டூர் வனப்பகுதியில் முழுக்க குவார்ட்ஸ் என்னும் கனிமத்தால் ஆன குன்று வெள்ளை வெளேர் எனக் காட்சித் தருகிறது. இதன் அடிப்பகுதியில் வழவழப்புடன் கூடிய ஒரு சிறிய குகை போன்ற அமைப்பு காணப்படுகிறது. அதன் கீழே கிணறும், அதில் நீரும் காணப்படுகிறது.

# ஆசிரியர் குறிப்பு



…

தமிழ் மொழியில் நல்ல அறிவியல் நூல்கள் இல்லாத குறையைக் களைவதில் ஏற்காடு இளங்கோ முக்கியப் பங்காற்றுகிறார். 2000 ஆம் ஆண்டில் வெளிவந்த இவரது முதல் நூல் அதிசயத் தாவரங்கள். அன்றிலிருந்து 21 ஆண்டுகளாகத் தொடர்ந்து பல நூல்களை எளிய தமிழில் எழுதி வருகிறார்.

தமிழ்நாடு அறிவியல் இயக்கத்தின் சேலம் மாவட்ட உதவிச் செயலாளராக 12 ஆண்டுகளும், மாவட்டச் செயலாளராக 8 ஆண்டுகளும் பணிபுரிந்துள்ளார். பின்னர் தமிழ்நாடு அறிவியல் இயக்கத்தின் சேலம் மாவட்டத் தலைவராகவும் செயல்பட்டுள்ளார். இவர் மக்களிடம் அறிவியல் விழிப்புணர்வை ஏற்படுத்தும் முக்கிய காரணியாக உள்ளார்.

இவருடைய பழங்கள் மற்றும் செவ்வாய் கிரகமும், செவ்வாய் தோஷமும் ஆகிய இரண்டு நூல்கள் அனைவருக்கும் கல்வி இயக்கம் என்ற அமைப்பின் சார்பாக 38000 பள்ளிகளுக்கு வழங்கப்பட்டுள்ளன.

- தமிழ்நாடு அறிவியல் இயக்கம் வெளியிடும் துளிர் அறிவியல் மாத இதழின் ஆசிரியர் குழுவில் முக்கியமானவர்.
- எழுத்துச்சிற்பி, அறிவியல் மாமணி, வல்லமைமிகு எழுத்தாளர், உழைப்பாளர் பதக்கம் ஆகிய விருதுகளால் கௌரவிக்கப்பட்டுள்ளார்.
- 1992 ஆம் ஆண்டு ஏற்காட்டில் உள்ள பெரிய ஏரியில் மண்டிக் கிடந்த ஆகாயத் தாமரைகளை மாணவர்கள், தொண்டு அமைப்புகள் மற்றும் பொதுமக்கள் உதவியுடன் தமிழ்நாடு அறிவியல் இயக்கம் சார்பாக, நீக்கி ஏரியைத் துப்புரவு செய்தார்.
- இணையதளம் பொதுவகத்தில் 23 துணைப்பகுப்புகளின் மூலம் 18,715 படங்களை இணைத்துள்ளார்.
- ஏற்காடு மலையில் உள்ள தாவரங்களை வகைப்படுத்தி, பெயரிட்டு, அனைத்து புகைப்படங்களையும் இணையதளம் பொதுவகத்தில் பதிவிட்டுள்ளார். இதுவரை 2,600 தாவரங்களின் 9,980 படங்களை இணைத்துள்ளார்.

- பிரிதிலிபி என்னும் இணையத்தில் 108 கட்டுரைகளை எழுதியுள்ளார். இதுவரை 21,374 பேர் படித்துள்ளனர்.
- ப்ரீ தமிழ் இ.புக்ஸ் மூலம் 32 புத்தகங்கள் இணையத்தில் வெளியிடப்பட்டுள்ளன. அவை ஜூன் 2015 முல் டிசம்பர் 2021 வரை 5,47,139 முறை பதிவிறக்கம் செய்யப்பட்டுள்ளன.

சிறிய அளவிலும், பெரிய அளவிலும் 100 புத்தகங்களை இதுவரை எழுதியுள்ளார். தொடர்ந்து அறிவியல் நூல்களை எழுதி வருகிறார்.

## FREETAMILEBOOKS.COM

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஒர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ்

மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த

மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை "Creative Commons" உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள்

அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Commons" உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்

3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/ பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும்  எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://www.kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

**துவக்கம்**

உங்களது வலைத்தளம் அருமை (வலைதளத்தின் பெயர்).

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

**முடிவு**

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**SUPPORTED BY**

கணியம் அறக்கட்டளை http://kaniyam.com/foundation

# கணியம் அறக்கட்டளை




**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**தற்போதைய செயல்கள்**

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

**கட்டற்ற மென்பொருட்கள்**

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஒஎஸ் செயலி

- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

**அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்**

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்
- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி

- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

## வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**
**Account Number : 606 1010 100 502 79**
**Union Bank Of India**
**West Tambaram, Chennai**
**IFSC – UBIN0560618**
**Account Type : Current Account**

**UPI செயலிகளுக்கான QR Code**




BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**



**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.